*Te<u>n</u><u>r</u>al*

*Malar 3, ita<u>l</u> 22*

*February 02, 1957*

Record no. 947

# தென்றல்

ஆசிரியர் கண்ணதாசன்.

உள்நாடு (இலங்கை உட்பட) விலை இரண்டணா. | வெளிநாடு மூன்றணா | அலுவலகம் : 'தென்றல்' சென்னை-6.

மலர் 3 | சென்னை | 2—2—57 | சனிக்கிழமை | இதழ் 22


## எத்தர் முகாமில் ஏமாற்று வேலை!

கற்பனைகள் பிறக்கும்போது மனிதன் தன்னையும், தன் சொந்த நிலைமைகளையும் மறந்துவிடுவான். தன்னை மறந்தவன்தான், கற்பனாலோகத்தில் மிதப்பான். அதிலும், எழுத்தாணி கற்பனை செய்ய ஆரம்பித்துவிட்டால் கரை கடந்து தானே போகும்? அதல்லாமல் நேற்றுவரையில், யதார்த்த வாதம் பேசித் திரிந்த எழுத்தாணிக்குக் கற்பனை பிறந்துவிட்டால் கேட்கவா வேண்டும்?

ஆமாம், பொய்யல்ல! எழுத்தாணியாவது அதுவும், யதார்த்தவாதம் பேசும் எழுத்தாணியாவது, கற்பனை செய்வதாவது என்று நேயர்கள் நினைக்கலாம். நான் சொல்வது உண்மைதான் ஐயா. அந்த எழுத்தாணி கம்யூனிஸ்டுகள் கையில் பிடித்துள்ள எழுத்தாணிதான். வேண்டுமானால் 27-12-56 வியாழன், 'ஜனசக்தி'' பத்திரிகையைத் தேடிப் பிடித்து 2-ம் பக்கத்தைத் திருப்பிப் பாருங்கள். கண்ணுக்குத் தென்படும்.

போகட்டும். எழுத்தாணியின் கற்பனைதான் என்ன? என்பதைப் பார்ப்போம். 'மதிப்பிற்குரிய' டில்லி அமைச்சுக் குழுவைச் சேர்ந்த நமது நிதிமந்திரி டி. டி. கிருஷ்ணமாச்சாரி வர்த்தக சபையில் பேசினாராம். அந்தப் பேச்சைக் கேட்ட எழுத்தாணிக்குப் பொத்துக்கொண்டு கிளம்பிய கோபாவேசத்தில் உதித்த கற்பனை இருக்கிறதே, அது மிக அபாரமாய் தன்னை மறந்து உளறச் செய்திருக்கிறது. எழுத்தாணிக்குக் கோபம் வரும் அளவுக்கு டி. டி. கே. என்ன பேசினார் என்று கேட்கிறீர்களா? அதாவது, தேர்தல் காலம் ஆயிற்றே, அதுவும் அவர் பேசுமிடமும் வர்த்தக சங்கமாயிற்றே, அந்த இடத்தில் போய் ஏதாவது ''தத்துப்பித்தென்று'' கம்யூனிஸ்டுகளைத் தாக்கியிருப்பார். அதனால்தான் எழுத்தாணிக்குக் கோபம் பிறந்திருக்கும் என்று நீங்கள் கருதலாம். ஐயன்மீர்! அவர் ஒன்றும் அவர்களைத் தாக்கவில்லை. அதற்கு மாறாக, அவர்கள் பட்டிதொட்டிகளில் பாட்டாளி மக்களிடையே செய்யும் பிரசாரத்தைத் தான் பணம் படைத்த வர்த்தகர்களிடையே பேசினார். அவர் பேச்சை எழுத்தாணியின் எழுத்து வடிவிலேயே எடுத்து இயம்புகிறேன் கேளுங்கள்.

'' இந்த நாட்டின் வறுமைப் பிணியைப் பற்றி அவர் (டி. டி. கே.) அந்த முதலாளிகள் கூட்டத்தில் சித்தரித்த காட்சி...... ஆகா, இந்த நாட்டிலுள்ள எந்தக் கவிஞனாலும் கூடச் சித்தரிக்க முடியாத காட்சி!''

''நான் எங்கு சென்றாலும், வறுமை, பசி, பட்டினி, கருகிய முகங்களைக் காணுகிறேன். கந்தல் துணியுடன் உழைக்கிறான் பாட்டாளி. பரம தரித்திரத்தில் நமது சமுதாயத்தை அலங்கரிக்கிறான். ஏ! பணக்காரர்களே! தனவந்தர்களே! முதலாளி நண்பர்களே! இதைப் பாருங்கள்! கேளுங்கள் அள்ளித் தாருங்கள்!''—இதுதான் டி. டி. கே பேசியது. இந்தப் பேச்சைக் கேட்டு ஏன் கம்யூனிஸ்ட் எழுத்தாணிக்குக் கோபம் வரவேண்டும் என்று கேட்கிறீர்களா? அவர்கள், ''டிரேட் மார்க்'' பிரசங்கத்தை, அதிலும் தேர்தல் நேரத்தில், டி. டி. கே. போன்ற முதலாளியா பேசுவது? இது தான் அவர்கள் கோபத்திற்குக் காரணம். நமக்குத் தெரியும், டி. டி. கே. போன்ற பெரும் முதலாளிகளால், நாட்டில் சோஷலிசத்தைக் கொண்டுவர முடியாது. அதற்கு மாறாக, தங்கள் வர்க்க நலனுக்கு ஆபத்து ஏற்பட்டால் தம் வர்க்கத்தைக் காப்பாற்ற முன் நிற்பார்களே ஒழிய ஏழைகள் பக்கம் நிற்கமாட்டார்கள்!

ஆனால், கம்யூனிஸ்ட் எழுத்தாணி தன்னை மறந்து எழுதுவது வேடிக்கைதான். சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் சமீபத்திய காங்கிரஸ் ஒரு முக்கிய தீர்மானம் நிறைவேற்றி உள்ளது. அதாவது, ''சாத்வீகமாக, முதலாளிகள் மனதைப் பிரச்சாரத்தின் மூலம் மாற்றி நாட்டில் சோஷலிசம் அமைக்கலாம்'' என்பதுதான். நமது இந்தியக் கம்யூனிஸ்டுகளின் இத்தனை ஆண்டுப் பிரச்சாரத்தின் பயனாகத் தான் டி. டி. கே. மனம் மாறி இப்படிப் பேசினார் என்று ஏன் எழுத்தாணி எண்ணக்கூடாது? அதுதான் போகட்டும். பண்டிதரோடு காதல் புரியத் துடிக்கிறது எழுத்தாணி. காங்கிரஸ் தலைவர் நேருவைத் தூக்கி வைத்துக்கொண்டு ஆடுகிறது. அப்படி இருக்க, டி. டி. கே. பேசியதில் மட்டும் எழுத்தாணிக்குக் கோபம் வருவானேன். அதுதான் எழுத்தாணிக்குப் பீடித்திருக்கும் தேர்தல் ஜுரம். அந்த ஜுரத்தில் தான், தன் காதலையும் மறந்து, தேர்தலுக்காக வேஷம் போடும் டி. டி. கே. மீது பாயச் செய்கிறது. அதாவது, ''நடு வீதியில் விழுந்து கிடக்கும் எச்சிலிலைக்கு இரண்டு பிச்சைக்காரர்கள் அடித்துக் கொண்டதைப் போல.''

★

போகட்டும். டி. டி. கே. பேசுவது செய்வது எல்லாம் தேர்தலுக்காகத்தான். யாருக்கும் எவ்வித சந்தேகமும் கிடையாது. இந்த எழுத்தாணியாவது யோக்கியமாய், நடக்கிறதா என்றால் அதுவும் இல்லை. சென்னை சட்டசபையருகே பீடித் தொழிலாளர்கள் போராட்டம் நடைபெறுகிறது. பலநூறு பீடித் தொழிலாளர்கள் கைது செய்யப்பட்டார்கள். இந்த நிகழ்ச்சி சென்னை மக்கள் பெரும்பாலோருக்குத் தெரியும். இந்தப் போராட்டம் இப்பொழுது நடைபெற்றதற்குக் காரணம் தெரியுமா? இதுதான் தேர்தல் ''ஸ்டன்ட்''. ஆத்திரப்பட வேண்டாம்! காரணம் கூறுகிறேன். பிறகு நீங்களே, அந்த முடிவுக்கு வருவீர்கள். சென்னை பீடித் தொழிலாளர் சங்கம் (ஐக்கிய பீடித்தொழிலாளர் சங்கம்) கம்யூனிஸ்டுகளின் பிடிப்பில் உள்ள ஒரு தொழிற்சங்கம். இந்தச் சங்கத்தில் உள்ள பீடித் தொழிலாளர் தங்கள் நியாயமான கோரிக்கைகளுக்காகப் போராட, கிட்டத்தட்ட ஆறு மாதங்களாகத் துடித்து வந்தார்கள். அதைக் கம்யூனிஸ்ட் தலைமையினர் தங்கள் புதிய கட்சிக் கொள்கைக்கேற்பப் பலவித சர்க்குப் போக்குச் சொல்லி ஒத்தி போட்டு வந்தனர். இப்படி ஒத்திபோடுவதன் மூலம், தொழிலாளர்களின் போராட்ட உணர்வை மழுங்கடித்துவிட முயன்றனர்.

ஆனால், அதற்கு மாறாக தொழிலாளர்கள் போராடத் துடித்தனர். இந்தத் தலைவர்களை உதறி எறிந்துவிட்டு, தங்கள் போர்க் கொடியையும் உயர்த்திவிட்டனர். சட்டசபை முன் ஆர்ப்பாட்டம் செய்வது என்று முடிவுக்கு வந்து செப்டம்பர் மாதக் கடைசியில் ஒருநாள் குறித்து சட்டசபை முன் ஆர்ப்பாட்டம் செய்யத் தயாரிப்புகள் செய்தனர். இதை எப்படித் தடுப்பது என்று கம்யூனிஸ்ட் தலைவர்கள் துடியாய்த் துடித்தனர். யோசனை ஒன்றும் புலப்படவில்லை. திடீரென்று, சகுனத்தில் நம்பிக்கையில்லாத கம்யூனிஸ்டுகளுக்குப் பஞ்சாங்கத்தில்

— 3-ம் பக்கம் —

# கழகமா? காங்கிரசா?

★ நாட்டு நிலைமையைத் தெளிவாக்குகிறது இந்த நாடகம் ★

### காட்சி : 1.

[அறுபது வயதான இருளாண்டி; அவர் மனைவி முத்தம்மாள். இருளாண்டி வெளியே சென்று அலுத்துக் களைத்து வீட்டிற்கு வருகிறார்.]

**இருளாண்டி :** அடியே முத்தம்மா, கொஞ்சம் நீராகாரம் கொண்டா. மனுசனுக்கு ஆயாசமா வருது.

**முத்தம்மாள் :** இந்தா கொண்டுவர்ரேன். எங்கபோயிருந்திங்க? ரெம்பவும் சோர்வா இருக்கீங்களே!

[முத்தம்மாள் சோற்றுத் தண்ணீரில் உப்புப் போட்டுக் கலக்கிக் கொண்டுவந்து கொடுக்கிறாள். அதை வாங்கிக் கிழவர் குடிக்கிறார்.]

**இரு :** வேறெ எங்க போறது? அந்த நாச்சிமுத்துகிட்ட ஒரு பத்து ரூபா கைமாத்து கேட்டிருந்தேன். தர்ரேன்னு சொல்லியிருந்தாரு. இப்ப போய்ப் பார்க்க ஆளு எங்கேயோ போயிட்டாரு. இடுப்பில கட்றதுக்குகூடச் சரியான துணியில்லே. இராத்திரியெல்லாம் பனி வேறு மனுசனை வாட்டறது. ஒரு நல்ல கெட்டித்துப்பட்டாவா ஒண்ணும் தலையில் சுத்திக்கொள்றதுக்கு ஒரு துண்டும் எடுக்கலாமின்னு நினைச்சுத்தான் கேட்டேன்.

**முத் :** ஆமா நல்லாயிருக்கு நீங்க பேசுறது. இன்னும் ரெண்டுநாள் போச்சின்னு கஞ்சிக்கு இருக்கிற சோளம் தீந்துபோகும். அப்புறம் என்ன செய்யறதுங்கிற கவலை; படுத்தா கண்ணு பட்டுன்னு மூடமாட்டேங்கிது. இந்த நிலைமையில் துப்பட்டா, துண்டுன்னு பேசுறீங்களே.

**இரு :** அட ஆண்டவா! என்ன கஷ்டங்கள்...கஞ்சி குடிக்கக் கஷ்டம், வேட்டி உடுத்தக் கஷ்டம், பாழாய்ப்போன இந்த உடம்பைத் தரையில் சாய்த்துப் படுக்கக் கஷ்டம்...கஷ்டமின்னாலும் இந்த ஏழெட்டு வருஷமாச் சொல்லமுடியாத கஷ்டம். நம்ம மண்டை மடிஞ்சாத்தான் கஷ்டமும் தீரும்.

**முத் :** வர்ற கஷ்டம் வந்துதான் தீரும்! வீணு கவலைப்பட்டு என்ன லாபம். அடடே...இன்னொன்னு மறந்திட்டேனே. நம்ம நாட்டாண்மைக்காரர் சுருளிமலை கொஞ்சநேரத்துக்கு முன்னடி இங்கே வந்திருந்தாரு. உங்களை எங்கேன்னு கேட்டாரு. வெளியே போயிருக்காருன்னேன், அப்புறம் வர்ரதா, சொல்லிட்டுப் போயிக்காரு.

**இரு :** சுருளிமலையா நம்ம விட்டுக்கு வந்தாரு! இந்த நாலைந்து வருஷமா நம்ம வீட்டுப் பக்கம்கூட அவர் எட்டிப்பார்த்ததில்லையே. என்னமோ விசேஷம்தான்! ஆமா என்ன சங்கதின்னு கேட்டயா?

**முத் :** அப்படியொண்ணும் விசேஷமில்லிங்க. இன்னும் ஒரு மாதத்தில் ஏதோ ஓட்டுப் போடுறது வருதாமில்ல. அதுக்காக நம்மளையெல்லாம் கண்டுபேசிட்டுப் போகலாமின்னு வந்தாராம்.

**இரு :** ஓகோ...தேர்தலைச் சொல்றயா. நம்ம சுருளிமலை இதே சங்கதிக்காகத்தான் அஞ்சு வருஷங்களுக்கு முன்னே ஒருதடவை நம்ம வீட்டுக்கு வந்தாரு. இப்ப மறுபடியும் அந்தத் தேர்தல் வந்திருச்சி போலிருக்கு. ஆமா வேற உங்கிட்ட ஒண்ணும் சொல்லலையா.

**முத் :** ஏன், நிறையச் சொன்னாரே. அவருகூட பத்துப் பேரு வந்திருந்தாங்க (காங்கிரஸ் தேர்தல் சின்னத்தைக் காட்டி) இதோ இந்தப் படத்துக் கட்சிக்காரருக்குத்தான் ஓட்டுப் போடணுமின்னு கட்டாயமா கேட்டுக்கிட்டாரு. உடனே மேல் கூரையைப் பார்த்தாரு. மிகுந்த வருத்தத்துடன் "என்ன முத்தம்மா என்கிட்ட சொல்லக்கூடாதா? கூரையெல்லாம் இப்படிப் பிரிஞ்சுபோய்க் கிடக்குதே. நாலு சுமைத் தட்டி தர்ரேன்; நல்லா கூரையைச் செம்மைப்படுத்தித் தர்ரேன்'னாரு. கொஞ்சநேரம் கழிச்சி நம்ம வீட்டுக்கு வர்ரதா சொல்லிவிட்டுப் போயிருக்காரு.

**இரு :** ஆமா இவக கூரைபோட்டுக்குடுத்து நம்ம தலையில் நிய வக்க வேண்டியதுதான். போன தடவையும் இந்தப் படத்துக்காரனுக்குத்தான் ஓட்டுப் போட்டோம். உங்க கஷ்டமெல்லாம் திந்துபோகும், பெரிய அரண்மனை ஆட்கள்போல எல்லோரும் வாழலாமின்னு கத்துனுங்க. அந்த அளவோட சரி. அஞ்சு வருசங்களுக்கு முன்னபட்ட கடன் ஐம்பது ரூபாயை இன்னும் கட்டமுடியலே. அவன் ஆட்சி செஞ்சி என்ன லாபம்? ஏழைகளோட கஷ்டம் தீர யாரு பாடுபடருன்? மாளிகைக்காரனுக்கு மெம்மேலும் மாளிகையாச் சேருது. குடிசைக்காரனுக்கு வர வர அந்தக் குடிசையும் சொந்தமில்லாமப் போகுது. வெள்ளக்காரன் போனதிலிருந்து தாங்கமுடியாத தொல்லை. தொல்லையில்லாத வாழ்வு தராத சுதந்திரம் வந்து என்ன பயன்? சரி சரி, சீக்கிரமா கஞ்சி காச்சு. பசி வயித்தைக் கிள்ளுது.

### காட்சி : 2.

[தங்கப்பன்-தன்னுடைய கிராமத்திலும் சுற்றுப்புறங்களிலும் தி. மு. கழகத்தின் கருத்துக்களை எடுத்துக் கூறுபவன். தி. மு. க. அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும், அதனுடைய அனுதாபிகள் ஒவ்வொருவரும் தேர்தலுக்காக ஊர் ஊராகச் சென்று பாடுபடவேண்டும், தி. மு. கவின் கொள்கைகளை மக்களிடத்தில் விளக்கிக் கூறி, அவர்கள் மன நிறைவோடு நமக்கு 'ஓட்' அளிக்கச் செய்யவேண்டும் என்ற அறிஞர் அண்ணா அவர்களின் வேண்டுகோளின்படி ஊர் ஊராகச் சென்று 'ஓட்' கேட்டு அவர்களுடைய முழு ஆதரவையும் பெற்றுக்கொண்டு இப்பொழுது இருளாண்டியின் வீட்டிற்கு வருகிறான்.]

**தங்கப்பன் :** வணக்கம் தாத்தா.

**இரு :** வா, தம்பி. தம்பி யாருன்னு தெரியலையே.

**தங் :** என்னுடைய சொந்த ஊர் கோட்டைப்பட்டி தாத்தா! நீங்ககூட கேள்விப்பட்டிருப்பீங்களே, கன்னல் காமயசாமின்னு, அவருடைய மகன்தான் நான்.

**இரு :** அடடே, நம்ம கன்னல் காமயசாமி மகனா நீ. அவரு எனக்கு ஆப்த நண்பராச்சேப்பா. ஆமா, என்ன திடீர்னு இந்தப் பக்கம்...

**தங் :** தாத்தா, இன்னும் ஒரு மாதத்தில் பொதுத் தேர்தல் நடக்கப் போகிறது. எங்களுடைய கட்சி இந்தத் தேர்தலில் போட்டியிடுகிறது. நீங்களெல்லாம் ஆதரவு கொடுத்து 'ஓட்' செய்யனும்.

**இரு :** என்னப்பா பெரிய தேர்தல்? இந்தத் தேர்தல் வந்து உருப்படியா என்னப்பா செய்யப்போகுது? வாழ்றவன் வகையா வருசமெல்லாம் வாழ்ந்திட்டே இருக்கிறான். வீழ்றவன் மேடேற முடியாமல் மேலும் மேலும் அதளபாதாளத்திற்குப் போகிறான். ஆமா, நீ எந்தக் கட்சியைப் பற்றி, தேர்தலில் போட்டியிடப் போகுதுன்னு சொன்னே! நேத்துக்கூட நாட்டாண்மைக்காரர் சுருளிமலை இங்கே வந்திருந்தாரப்பா.

**தங் :** நான் சொல்றது திராவிட முன்னேற்றக் கழகம். நாட்டில் பலத்த எதிர்க்கட்சி இதுதான்.

**இரு :** ஓ...அண்ணாத்துரை கட்சியா? அந்தக் கட்சிக்காகவா நீ ஓட் கேட்க வந்திருக்கிறே?

**தங் :** ஏன் தாத்தா அப்படிக் கேக்கிறீங்க?

**இரு :** அது சாமியில்லேன்னு சொல்றதாச்சேப்பா?

[தங்கப்பன் முகம் மலருகிறது. கழகத்தைப் பற்றி ஒரு நல்ல விளக்கம் தந்துவிட்டுப் போய்விடலாம் என்ற எண்ணமுடன் அங்கிருந்த கயிற்றுக்கட்டிலில் நன்றாக உட்கார்ந்து கொள்ளுகிறான்.]

**தங் :** அப்புறம் வேறெ என்னென்ன சொல்லுவது தாத்தா?

**இரு :** வேறென்னென்னவோ எனக்குத் தெரியாது, எனக்கு இது மட்டுந்தான் தெரியும்.

**தங் :** தாத்தா, நீங்க கோபிக்காமல் நான் கேட்கிற கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லணும். நீங்க இருக்கிற இந்த ஊரில் எத்தனை சாமிகள் இருக்குதுன்னு கொஞ்சம் கணக்குப் பண்ணிச் சொல்லுங்க!

**இரு :** (சிறிதுநேரம் கழித்து) ஏறக்குறைய பதினொரு சாமிகள் இருப்பதாகத் தெரிகிறது.

**தங் :** சரி, இந்தப் பதினொரு கோயில்களில் உள்ள மொத்த முதல் எவ்வளவு மதிப்பாகும் என்று உத்தேசமாய்ச் சொல்லுங்க பார்க்கலாம்.

**இரு :** என்ன, சுமார் இருபதினாயிர ரூபாயாகும்.

**தங் :** இந்த இருபதினாயிர ரூபாயும் ஒருவித பயனுமில்லாமல் அறையில் முடங்கித்தானே கிடக்கிறது! இது இந்த ஊர் மக்களுக்கு ஏதாவது விதத்திலாவது பயன்பட்டால் இந்த ஊர் மக்கள் இன்று இவ்வளவு கஷ்டப்பட வேண்டியதில்லையே.

**இரு :** நம்ம கஷ்டத்திற்காக சாமி சொத்தை என்னப்பா செய்றது?

**தங் :** தாத்தா உண்மையா நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்க! இந்த ரூபாயினாலே சாமிக்கு என்ன உபயோகம்? நல்ல கெட்டிக் கட்டிடத்தினாலே சாமிக்கு என்ன பாதுகாப்பு? ஏதோ ஒரு கல்லைத்தானே நீங்க சாமின்னு சொல்றீங்க. அந்தக் கல்லுக்குத்தானே பெரிய கற்கோட்டை கட்டிவச்சிருக்கீங்க. இதுக்கெல்லாம் செய்றவங்க போன வருடம் ஒரு ஆரம்பப்பள்ளிக்காக இடம் கிடைக்காம, பணம் இல்லாம துன்பப்படுகிற போது இதிலே ஏதாவது ஒரு சாமி கட்டிடத்தைக் கொடுத்திருக்கக்கூடாதா? நம்ம குழந்தைகளுக்கு உபயோகப்படாத கட்டிடம் ஒரு கல்லுக்குத்தானே உபயோகப்படுது. இதையெல்லாம் கேட்டா சாமியை வையிறவன் என்று பேசுறாங்க.

**இரு :** இப்ப நீ என்னப்பா சொல்றே?

**தங் :** சாமி இல்லேன்னு ஒருத்தரும் சொல்லலே. ஆனா, நாங்க சொல்ற சாமிக்கும் மற்றவங்க சொல்ற சாமிக்கும் எவ்வளவோ வேற்றுமை இருக்குது. மனித சக்திக்கெல்லாம் மேற்பட்டது, நமது ஆற்றலுக்கெல்லாம் கடந்தது ஒன்று-ஒரு சக்தி இருக்கிறது. அதுதான் இயற்கை. அதுதான் கடவுள். ஆனால் மற்றவங்க அதுக்கும் நம்மளைப்போல உருவத்தைக் கற்பித்து, கலியாணம் செஞ்சிவச்சி, வைப்பாட்டி கூட்டிவச்சி, அவங்களுக்கு வீடுகட்டி, ஆடு, கோழி முதலியவைகளைக் கொலை செய்து நாக்கைக் குத்தி, தீச்சட்டி ஏந்தி, காவடி எடுத்து, பூசாரி என்பவனுக்குக் கடன் வாங்கியாவது காணிக்கை கட்டி, பெரிய ஆர்ப்பாட்டம் செய்றுங்க. ஆனால் அன்பே சிவம் என்றெல்லாம் சொல்றுங்க. உண்மையே தெய்வம் என்று காந்தியார் சொன்னார். அன்பிற்கும் உண்மைக்கும் கெட்டிக் கட்டிடமெதுக்கு? பூசாரி எதுக்கு? உயிர்ப்பலி எதுக்கு? நம்ம நெஞ்சினுள்ளேயே மனித சக்திக்கெல்லாம் கடந்த ஒன்றை கடவுளை வழிபட்டால் போதாதா?

— அடுத்த இதழில் முடியும் —



"போற்றுபவர் போற்றட்டும் புழுதி வாரித்
தூற்றுபவர் தூற்றட்டும்; தொடர்ந்து செல்வேன்
ஏற்றதொரு கருத்தை என(து) உள்ளம் என்றால்
எடுத்துரைப்பேன் எவர்வரினும் நில்லேன்: அஞ்சேன்!"

# எண்ணம்

மலர் 3 ‖ 2–2–57 ‖ இதழ் 22

## வடமொழிக்கு வக்காலத்து!

"சமஸ்கிருதம் செத்த மொழியாகிவிட்டது. 'தேவ பாஷை' என்று 'அவாள்' பெருமைப்பட்டுக் கொண்டிருந்த மொழி, திசை தெரியாமல் ஓடிவிட்டது." இது, மொழி ஆராய்ச்சியாளர்களின் முடிவு.

ஆனால் சமீபத்தில் நடந்த சென்னை சமஸ்கிருதக் கல்லூரிப் பொன் விழாவில் பேசிய டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்களும் நீதிபதி பி. வி. ராசமன்னார் அவர்களும் செத்த மொழியை வெகுவாகப் பாராட்டிப் பேசியிருக்கிறார்கள்.

"உண்மையான கலாச்சாரம் எத்தகையது என்பதை நமக்கு உணர்த்துவது சமஸ்கிருதமாகும். இன்றும் கூட நாட்டின் பல்வேறு பகுதிகளில் வாழும் பண்டிதர்களுக்கிடையே நடைபெறும் கடிதப் போக்குவரத்து சமஸ்கிருதத்தில் தான் உள்ளது. ஆகவே, அது வாழும் மொழியல்ல என்று கூறுவது சரியல்ல."

—சமஸ்கிருதத்தைச் சிறப்பிக்க டாக்டர் அவர்கள் பெரிதும் முயன்றிருக்கிறார்கள். உண்மையான கலாச்சாரம் எத்தகையது என்பதை சமஸ்கிருதம் எந்த அளவிலே உணர்த்தியிருக்கிறது என்பது நாடறிந்த விஷயம். சமஸ்கிருதம் பயிலும் மாணவர்கள், தமிழ் மாணவர்களுடன் ஒரே பந்தியில் இருந்து சாப்பிட மறுத்த செய்தியைக் கூட நாம் அறிவோம். அப்படியிருக்க அதன் கலாச்சாரத்தைப் பற்றி டாக்டர் பெருமையாகப் பேசுவது வேடிக்கையாகத் தானிருக்கிறது. சமஸ்கிருதத்தை 'வாழும் மொழி' என்று நிறுவ முற்படும் டாக்டருக்கு மனோன்மணீயம் ஆசிரியர் சுந்தரனாரின் பொன்னுரையைச் சுட்டிக்காட்ட விரும்புகிறோம்.

"கன்னடமும் களிதெலுங்கும்
கவின் மலையாளமும் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே
ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக்
கழிந்தொழிந்து சிதையா உன்
சீரிளமைத் திறம்வியந்து
செயல்மறந்து வாழ்த்துதுமே"

—மேற்கண்ட வரிகளில் தமிழின் பெருமை மட்டுமல்ல சமஸ்கிருதத்தின் வீழ்ச்சியும் எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. உலக வழக்கு ஒழிந்த மொழி என்று அவர் சமஸ்கிருதத்தைக் குறிப்பிடுகிறார். ஒரு மொழியின் வழக்கு அழிந்த பின்னர் அந்த மொழியின் வடிவம் மட்டும் இருந்து என்ன பயன்? உயிர் இல்லாத உடலால் எத்தகைய பயனும் இருக்க முடியாது. உயிரற்ற மொழியை 'வாழும் மொழியல்ல' என்று சொல்வது சரியல்லவாம், டாக்டர் கூறுகிறார்! சமஸ்கிருதக் கல்லூரிப் பொன் விழாவிலே பேசியவரின் பேச்சு இதைத் தவிர வேறு எப்படியிருக்க முடியும்?

அடுத்துப் பேசிய நீதிபதி ராசமன்னார், டாக்டரையும் மிஞ்சி ஒருபடி மேலே போயிருக்கிறார்.

"சமஸ்கிருதம் ஆரிய மொழியானபடியால் திராவிடர்கள் அதைக் கற்கக் கூடாதெனத் தென்னாட்டில் கிளர்ச்சி நடைபெறுகிறது. பிராமணர்கள் எல்லோரும் ஆரியர்கள் என்று சமஸ்கிருதத்தை எதிர்ப்பவர்கள் எண்ணுகிறார்கள். சமஸ்கிருதத்துக்குக் கல்வி முறையில் முக்கிய இடம் அளிக்கப்பட்டால் பிராமணர்கள் சர்க்கார் வேலைகளில் அதிகமாக நுழைந்துவிடுவார்கள் என்று சிலர் அஞ்சுகிறார்கள்."

—இது ராசமன்னார் அவர்கள் பேசிய பேச்சின் ஒரு சிறு பகுதி. சமஸ்கிருத மொழியைக் கற்கக் கூடாது என்ற கிளர்ச்சி தென்னாட்டில் இல்லை. ஆனால் அதன் தத்துப் பிள்ளையான இந்தி மொழியைக் கட்டாயப்படுத்தக் கூடாது என்ற கிளர்ச்சிதான் நடைபெற்று வருகிறது என்பதை நினைவுபடுத்த விரும்புகிறோம். அது கூட, 'கற்கக் கூடாது' என்ற கிளர்ச்சியல்ல; 'கட்டாயப்படுத்தக் கூடாது' என்ற கிளர்ச்சி! மேலும் செத்துப்போன ஒரு மொழியைச் சித்தத்தில் எண்ணிக் கொண்டிருக்கும் நிலைமை தமிழ் மக்களுக்குக் கிடையாது. அதை உயிரூட்ட எண்ணுகின்ற 'உத்தமர்கள்' வேண்டுமானால் அந்த மொழியை நாளும் பொழுதும் எண்ணிக் கொண்டிருக்கலாம். தமிழ் சிறந்த மொழிதான் என்று சொல்லிக் கொண்டே, செத்த மொழியைச் சிங்காதனத்திலே ஏற்ற எண்ணுகிறார் நீதிபதி. மற்றவர்களைப் பற்றிக் கூடக் கவலையில்லை. நீதிபதியாக இருக்கும் ஒருவர் நடுநிலைமையிலிருந்து பேசவில்லையே என்பதை எண்ணித்தான் வருந்துகிறோம். ★

— 1ம் பக்கத் தொடர்ச்சி —

நம்பிக்கை பிறந்தது. தொழிலாளர்களிடம் சென்று, "தோழர்களே! ஒரு செய்தி கேட்டீர்களா? நேற்றையதினம் இரவு குருஷேவ் எங்கள் கனவில் வந்தார். அவருடைய கண்கள் நீரைச் சொரிந்தது. கோவென்று கதறி அழுதார். தனது வழுக்கைத் தலையில், "தலையோ தலை" என்று அடித்துக் கொண்டார். அடப் பாவிகளா! போயும் போயும் போராட நாள் பார்த்தீர்களே பாதகர்களா! உங்கள் நெடுநாளைய கனவு, "ஐக்கிய தமிழகம்", அக்டோபர் முதல் தேதி அமையப் போகிறது. நமது ஆருயிர்த் தோழர்கள் கேரளத்தார் நம்மை விட்டுப் பிரிந்து போகப் போகிறார்கள். நம்மோடு பிணைக்கப்பட்டிருந்த அருமை எம். எல். ஏ.க்கள் வேறு பிரிந்து போகிறார்கள். அந்த சுபதினத்திலா நீங்கள் ரகளை செய்யப் போகிறீர்கள். வேண்டாம், வேண்டாம்! ஐயகோ வென்று அலறினர். ஆகையால், இந்த சுபதினத்தில் நாம் ஏன் சட்டசபை முன் போய், போராட வேண்டும்? ஆகவே, நாங்கள் பிரிவுவிழாவை நடத்தி முடித்துவிட்டு, உங்கள் நல்வாழ்வுக்காக தூக்குக் கயிறையும் முத்தமிடத் தயார் என்று கூறியதாகக் கேள்வி. இப்படிக் கூறியதால் தான் அன்றையதினம் போராட்டம் நிறுத்தப்பட்டதாம். இதைத் தொடர்ந்து மாதம் இரண்டும் கழிந்தது. சட்டசபையும் கூடியது. வெளி ஊர் பீடித் தொழிலாளர்கள், இரண்டில் ஒன்று பார்த்துவிடுவது என்ற முடிவோடு, தங்கள் தலைவர்களையும் மீறி, சென்னைக்கு (சுமார் 300 பேர்கள்) வந்துவிட்டார்கள். கம்யூனிஸ்ட் தலைவர்கள் பாடு, பேராபத்தாய் முடிந்துவிட்டது. அவர்களுக்கு, உணவு, தங்க இடம் இவைகள் ஏற்பாடு செய்து தரவேண்டும். மேலும் அவர்கள் பொறுமையைச் சோதிப்பது எப்படிப் போய் முடியுமோ என்று பயந்தார்கள். ஆகவே, எப்படியாவது அந்தத் தோழர்களைத் தட்டிக் கொடுத்து ஒரு வகையாகத் திருப்திப்படுத்தி வண்டியேற்றிவிடத் தீர்மானித்தார்கள். அதன்படி பீடித்தொழிலாளர் ஊர்வலம் சட்டசபையை நோக்கிச் சென்றது. நேப்பியர் பார்க் அருகே கம்யூனிஸ்ட் தலைவர்கள் அதை நிறுத்தி வைத்து, எம். கல்யாணசுந்தரத்தை விட்டுப் மந்திரியை பேட்டி காண வைத்து, தொழிலாளர்களிடம் "தாஜா" செய்ய விட்டனர். ஆனால் தொழிலாளர்கள், பீடித்தொழில் சட்டம் வரும் வரை காத்திருந்து, பார்த்துவிட்டுத்தான் ஊருக்குத் திரும்பப் போவதாகத் திட்டவட்டமாக அறிவித்து விட்டனர். தொழிலாளிவர்க்கத் தலைவர்களுக்கு, தலைவேதனையாகப் போய்விட்டது. சரி, இதுவும் நன்மைக்கே என்று ஒரு கல்லில் இரண்டு மாங்காய் அடிக்கலாம் என்று தீர்மானித்தனர். அதாவது போராட்டம் மூலம், ஒரு பக்கம் தொழிலாளிகளைத் திருப்திப்படுத்தலாம். மறுபக்கம் இந்தக் 'கீர்த்தியை'த் தேர்தல் திக்விஜயத்திற்குப் பயன்படுத்தலாம் என்று முடிவுக்கு வந்தனர். இதன் விளைவுதான் சட்டசபையில் பீடித் தொழிலாளர்களின் போராட்டம்!

இப்படி, தேர்தல் ஜுர வேகத்தால் தனது நிலைக்கலனுக்கே ஆட்டங் கொடுத்து அவதிப்படும் 'அப்பாவி' எழுத்தாணியார்தான் எதிரியைக் கண்டு ஏளனம் புரிகிறார்.

தேர்தலுக்காகப் போராட்டங்களைத் தேடித் தேடி அலைந்து கொண்டிருக்கும் 'யதார்த்தவாதிகளு'க்கும் சோப்பு சீமான் டி. டி. கிருஷ்ணமாச்சாரிக்கும் உருவத்திலும் உளறிக் கொட்டுவதிலும் வித்தியாசம் இருக்கலாம்—ஆனால் நடைமுறையிலும் நாட்டைப் பிற்போக்குத்தனத்துக்கு அழைத்துச் செல்வதிலும்-சுய விளம்பரத்திலும்-சுகம் தேடி அலைவதிலும் கிஞ்சித்தும் வேற்றுமை கிடையாது என்பதை கடந்த ஐந்தாண்டுக் கால அனுபவத்தில் பொதுமக்கள் அறிவார்கள்-இதை இனி வரும் பொதுத் தேர்தலில் 'எழுத்தாணி' ஏந்திகளுக்கும் அந்தப் போர்வைக்குப் பின்னால் பதுங்கிக் கொண்டிருப்போர்க்கும் புரியவைக்கத்தான் போகின்றார்கள்.

—நாவரசன்

# தேர்தல் இரைச்சலில்...
# ...காம்ரேடுகள் ரகசியம்!

◉ மொலாச்
◉ பெலியல்
◉ மெம்மான்
◉ லூசிபர்
◉ பீல்சிபூப்

கிராம்வெல் தலைமையிலே இங்கிலாந்தில் மன்னர் பரம்பரைக்கு எதிராக எழுந்த புரட்சியில், இது போன்ற பெயர்களை—ஆதிபத்திய வாதிகளுக்கும்—அவர் தம் ஆதரவாளர்களுக்கும் — இங்கிலாந்துப் பொதுமக்கள் வேடிக்கைப் பெயராகச் சூட்டி, தீமையின் உருவம்-சமூக நன்மைக்கு விரோதி என்று மறைமுக 'அர்த்தத்தில்' குறிப்பிடுவார்களாம்.

இத்தனைக்கும், மேற்கண்ட சொற்கள் ஆங்கில மொழியில் தீமை சக்திகளைக் குறிப்பிடுவன அல்ல. கிராம்வெல்லுக்கு லத்தீன் மொழிக் **காரியதரிசியாகப் பணியாற்றிய மில்டன்** பெருங் கவிஞன் எழுதிய 'மீண்ட சொர்க்கம்' என்ற தொகுப்பில், தீமைகளையே நினைத்து - அல்லன செய்வதையே தொழிலாகக் கொண்டு நல்ல சக்திக்கு எதிராக, 'பாண்டிமோனியம்' என்கிற விசாலமான கூடத்திலே தலைமைப் பூதம் சாத்தான் தலைமையில் கூடிச் சதியாலோசனை செய்த குட்டிப் பூதங்களுக்குக் கொடுத்த பெயர்கள்தான் மேற்கண்டவை.

'கதை'யமைப்புக்காக, குட்டிபூதங்களுக்குக் கொடுத்த 'கரடுமுரடான' பெயர்களையே, புரட்சியின்போது தீய உள்ளத்தினருக்குக் காரணப் பெயராகச் சூட்டிக் குறிப்பிட்டனர், இங்கிலாந்து மக்கள்!

ஆலிவர் கிராம்வெல்லை எதிர்த்தோரை 'சைத்தான்'களுக்குச் சமமாக, ஆங்கிலேயர் பாவித்தது எத்தனை காலத்திற்குப் 'பெயர்விளங்கி' நின்றது என்பது விவாதத்துக்குரிய விஷயமாகி விட்டாலும், அதே பெயர்களை - அதே கருத்தில் மேளதாளத்துடன் சூட்டிக் கொள்ள நமது நாட்டுக் கம்யூனிஸ்டு காம்ரேடுகள் 'தயார்' கூறி - 'கோதா'வில் இறங்கி - கழுத்தையும் நீட்டிக் கொண்டிருக்கின்றனர், இந்த நாட்டுப் பெருங்குடி மக்களுக்கு முன்பாக!

'பாண்டிமோனியம்' என்கிற இடத்திலே சைத்தான்கள் கூடிக் கும்மாளம் அடித்த ரசனையான கட்டத்தைச் சுவைபடச் சித்தரித்த மில்டனின் காவியத்தைப் படித்து ரசிக்கமுடியாத பாமர மக்களுக்கு - நேருக்கு நேராக - கவிஞன் சித்தரித்த காட்சிகளைக் கூட்டாமல் குறைக்காமல் நடித்தே காட்டிவிடுவதென்ற 'கங்கணம்' காட்டிக் கொண்டு கம்யூனிஸ்டு காம்ரேடுகள் கிளம்பிவிட்டதைக் கண்டு, இந்த நாட்டின் "வெகுஜனப் பாரம்பரியம்" வாயைப் பிளந்து அண்ணாந்து பார்க்கிறது! ஆம், அவர்கள் அண்ணாந்து பார்த்தே புரிந்து கொள்ளக்கூடிய 'ஆகாச' வெளியில் தங்கள் அரங்குகளை நிர்மாணித்துக்கொண்டு ஆட்டம் போட்டுக் காட்டுகிறார்கள்.

பூமியில் கால் பாவாமல் நடக்க முயற்சி செய்யும் கத்துக்குட்டி ஜால வித்தைக்காரர்களைக் கூடத் தூக்கி அடித்துவிடக் கூடிய 'சாமர்த்தியத்துடன்' அவர்கள் 'ஜல் ஜல்' நாதத்தை எழுப்புகிறார்கள்!

'காங்கிரஸ் சர்வாதிகாரம் ஒழிக' என்று குதிகாலில் நின்று கூவுகிறார்கள். எங்களுக்கே ஓட்டு அளியுங்கள் என்று சக்கைப் போடு போடுகிறார்கள்! எத்தனை பேருக்கு என்றால், 55 பேருக்குக் கட்டாயம் போட்டே தீரவேண்டும் என்கிறார்கள்! "மீதியுள்ள 150 இடங்களில் யாரைக் கொண்டு போய் உட்கார வைப்பது" என்று கேட்கத்தக்கு முன்பே காங்கிரஸ்காரர்கள் வரட்டும்; அவர்களை எதிர்த்து நிற்கும் 150 தி. மு. கழகத்தினருக்கு மறந்தும் ஓட்டளிக்க வேண்டாம் — எங்கள் 55 பேருக்கு மட்டும் ஓட்டுப் போடுங்கள் - ஆமாம் அப்போது தான் சர்வாதிகாரக் காங்கிரசை முறியடிக்க முடியும்" என்கிறார்கள்.

கத்துக்குட்டி ஜால வித்தைக்காரன் கூட இப்படித்தான் பேசுவான். ஆளுக்குக் காலணா போடுங்கள் சாமி, ஐந்து ரூபாயை ஐநூருக்கிக் காட்டுகிறேன் என்பான். ஐந்தை ஐநூருக்கிக் காட்டுகிறவன் ஏன் ஆளுக்குக் காலணா வீதம் பிச்சை எடுக்கவேண்டும் என்று யாரும் கேட்கமாட்டார்கள் - ஏனென்றால் அது வித்தைக்காரப் பிழைப்பின் 'பால பாடம்'!

அந்த பால பாடத்தைத்தான் சரியாக ஒப்புவித்துத் தொலைக்கிறார்களா என்றால், அதற்கும் வக்கில்லை. 'இரும்புச் சுத்தி'யை மட்டும் கொடியில் போட்டுக் கொண்டால் ஆகுமா? 'மூளை சுத்தி' - 'நினைவு சுத்தி' வேண்டாமா?

தாற்காலிகமாக நிர்மாணிக்கப்பட்ட 'பாண்டிமோனியம்' அரங்கொன்றிலே ஒரு 'லூசியஸ்' பேசுகிறார்.

தேசிய நலன்களுக்கு விரோதிகள் என்று நம்மைப் பற்றிப் பழி சுமத்தும் இவர்கள் பாரம்பரியம், 1944-ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில். 'சுதந்திர ஈரான் சர்க்கார்' தனது நாட்டுச் செல்வமான எண்ணெய் விஷயத்தில் எடுத்த தேசிய நலன் கலந்த முடிவை மூர்க்கத்தனமாக எதிர்த்து நின்றதைச் சற்று நினைவுபடுத்திப் பார்க்கட்டும். அது அயல்நாட்டு விவகாரமென்றாலும், ஏறக்குறைய அதே 'காலக்கட்டத்தில்' (1944-50) பிரகாசா, ஓமாந்தூரார் ஆட்சியில் இவர்கள் தேசிய நலன்களுக்கும் தேசியச் சொத்துக்களுக்கும் எவ்வளவு தூரம் 'தோழர்'களாயிருந்தனர் என்பதையாவது நினைவுபடுத்திப் பார்க்கட்டும்!

இவர்களுடைய அகராதிப்படி, உற்பத்தியைப் பெருக்குவதோ, மக்களுக்குச் சுபிட்ச வாழ்வளிப்பதோ - நிலையான நிரந்தரமான அரசியலமைப்பைச் சாதிப்பதோ தேசிய நலன்கள் அல்ல. சோவியத் ரஷ்யாவுக்கு இந்த நாட்டைக் காட்டிக் கொடுக்க சமயத்தையும் - சந்தர்ப்பத்தையும் உருவாக்குவது - சோவியத் தலைவர்களுக்கு மட்டுமே 'லாலி' பாடிப் புகழ்ந்துரைக்கும்படி இந்த நாட்டில் ஓர் ஆட்டுமந்தைக் கூட்டத்தை எந்த வகையிலாவது 'அணிவகுக்க' வைப்பது-நிலையான அரசியலின்கீழ் நிம்மதியாக மக்களை வாழ விடாதபடிக்குக் குழப்ப நிலையையும் - குறைபாடுகளையும் பெருகச் செய்வதும்தான் அவர்கள் அகராதியில் தேசிய நலன்கள்!

கம்யூனிஸ்டுகள் தேர்தலில் நின்று ஆட்சிமன்றம் புகுவதற்கு முற்படும் தலையாய காரணம் ஆட்சியாளரைச் சில சமயங்களில் ஸ்தம்பிக்கச் செய்யவும், அவ்வப்போது 'ஆஹா ஊஹூ' என்று கத்தி, எப்போதும் எந்த ஆட்சியிலும் ஓர் பரவலான அதிருப்தியைப் பொது மக்கள் கொண்டிருக்கச் செய்யவுந்தானே ஒழிய, உள்ளபடியே உணர்வுபூர்வமான எதிர்க் கட்சியாக விளங்கவும், நாட்டு நன்மைகளுக்காக ஆட்சியாளரிடம் அதட்டிக் கேட்டு வேலை வாங்கவும் அவர்கள் ஆட்சிமன்றம் புகுவதில்லை.

அது மட்டுமல்ல, எந்த ஆட்சி வந்தாலும், உள்ளே என்ன நடக்கிறது என்பதைக் கண்காணிக்க மட்டுமே விரும்புகிறார்கள். கண்காணித்துக் கிடைக்கும் சேதிகளை, கவனம் வைத்துக்கொண்டு, தங்கள் மேலிடத்திற்குச் செய்தி அனுப்பத் தேவையான நபர்கள் மட்டுமே போதும் என்று நினைக்கிறார்கள். அதற்கு மேல், அதிகப்படியாகப் பொறுப்பேற்றுக் கொள்ளவோ, "மக்களுக்கான மாபெரும் நலன்களை"த் தங்கள் தலையில் தூக்கிப் போட்டுக் கொள்ளவோ அவர்கள் எப்போதும் - எந்த நாட்டிலும் விரும்புவதில்லை. ஏகாதிபத்தியவாதிகளால் அந்நாட்டுத் தொழிலாளர் படுகின்ற அவதிகளையும் - அந்த அவதியைத் துடைக்கக் கம்யூனிஸ்டுக் கட்சி செய்துவரும் சேவைகளைப் பற்றியும் - அதன் காரணமாக அந்தந்த நாட்டு அரசாங்கங்கள் 'மரணமூச்சு' விட்டு வரும் கோரக்காட்சிகளையும் வர்ணிப்பார்களே தவிர, இவர்களுக்கிருக்கும் 'செல்வாக்கை'யும் சேவா உணர்ச்சியையும், அதிகப்படியான உறுப்பினர்கள் சட்டசபைகளுக்குச் செல்ல முயற்சி எடுப்பதன் மூலம் வெளிக் காட்டமாட்டார்கள்.

சமீபத்தில் நடந்த தேர்தலுக்கு முன்பு பிரான்ஸ் நாட்டில் இயங்கிய ஆட்சி பீடங்கள் ஐந்தாறு மாதத்திற்கு மேல் தாக்குப் பிடிக்காமலே சரேல் சரேல் எனக் கவிழ்ந்து கொண்டிருந்தன. அப்படிக் கவிழ்வதற்குக் காரணம், கம்யூனிஸ்டுகள் அதிக எண்ணிக்கைதான். ஆனால், புதிதாகத் தோன்றும் மந்திரி சபைகள் அனைத்தும் கூட்டு மந்திரி சபையாகவோ, பேரம் பேசி முடித்த தனி மனிதரின் சாமர்த்தியத்தை வெளிப்படுத்துவதாகவோதான் இருந்தனவே தவிர, கம்யூனிஸ்டுகள் அமைத்த மந்திரிசபையாக ஒன்றுகூட இருந்ததில்லை. மந்திரிசபை அமைக்கும் அளவுக்கு அவர்களுக்கு 'பலம்' இருந்தும், கடைசி வரையில் அவர்கள் 'கவிழ்ப்பவர்'களாகவே காட்சியளித்ததற்குக் காரணம், பொறுப்பேற்கத் தயங்கும் போக்கிரித்தனந்தான்!

கம்யூனிஸ்ட் கட்சியைச் சட்டரீதியாகவே தடை செய்திருக்கும் அமெரிக்கா போன்ற நாடுகளை விடுத்து, சுதந்தரமாக இயக்க அனுமதி பெற்றிருக்கும் எந்த நாட்டின் தேர்தல்களின் விவரத்தைப் புரட்டினாலும், பத்து சதவிகிதம், எட்டு சதவிகிதம் என்றுதான் அந்தந்த ஆட்சிமன்ற ஸ்தானங்களுக்கான போட்டியிட்டிருப்பார்களே தவிர, அதற்குமேல் இருக்கா. குழப்பத்தை விளைவித்து, அவ்வப்போது 'ரகசியங்களை'ச் சேகரித்து மேலிடத்துக்கு அனுப்ப 100 பேர் கொண்ட சபையில் 10 பேர் இருந்தால் போதாதா, என்ன?

ஜனநாயகத்தைப் பற்றியும் எதிர்க்கட்சியின் முக்கியத்துவத்தைப் பற்றியும் நாள்தோறும் முழக்கும் 'மிகப்பெரிய எதிர்க்கட்சியான' கம்யூனிஸ்ட் கட்சியின் பாரம்பரியம், இதுவரை எந்த நாட்டிலே ஜனநாயகப்படி தேர்ந்தெடுத்த சட்டசபைகளின் மூலம் தனது ஆட்சியை ஸ்தாபித்தது என்பதற்குத் தகுந்த பதில் கொடுக்கட்டும்.

இப்போது ரஷ்யப்பிடியில் உள்ள ஹங்கேரி, போலந்து, ருமேனியா, செக்கோஸ்லேவகியா, ஆகியவைகளில் 'மக்கள் ராஜ்யம்' மலர்ந்த கதையை ஒளிவு மறைவின்றிப் பேசட்டும்.

அந்த நாடுகளில் ஜனநாயக ரீதியாக கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சி பீடத்தைப் பிடித்ததையும், ஆட்சி பீடம் ஏறிய பிறகு அந்த நாடு வளர்ச்சியுற்ற வரலாற்றையும் விவரித்து, அதேபோல் இங்கும் செய்வதாகத் தேர்தல் பிரச்சாரம் தொடங்கட்டும். கம்யூனிஸ்டுகள் ஆட்சி பீட மேறுவதற்கு முன்னால், அந்த நாடுகளின் வரவு - செலவு விவரமும் வந்ததற்குப், பின்னால் துண்டு விழும் தொகையையும் மனந்திறந்து சொல்லட்டும். அந்தந்த நாடுகளில் கிடைக்கும் மூலப்பொருள்களின் விவரத்தையும், அவை யாரால், எந்த எந்த வகையில் பயன்படுத்தப் படுகிறதென்பதையும் சொல்லட்டும்.

எதையும் சொல்லமாட்டார்கள்! கேவலம், 55 ஸ்தானங்களுக்காக மிகப் பெரிய நாடுகளின் புராணங்களை அவிழ்த்துக் கொட்டுவது தேவையில்லாத விவகாரம் அல்லவா?

இப்படி யெல்லாம் கேட்டால் கம்யூனிச சித்தாந்தத்தையே மறுக்கும் ஏகாதிபத்திய வெறியர்கள் - ஈடனின் கையாட்கள் - என்று தூற்றல் அகவல் பாடுகிறார்கள். "நற்பனையான காரணத்தை வைத்துக் கொண்டு 150 இடங்களுக்கு தி. மு. கழகம் போட்டியிடத் துணிந்து விட்டதாக அங்கலாய்க்கிறார்கள்.

'கண்ணுக்குத் தெரிந்திருக்கும் நல்ல காரணத்தை' வைத்திருக்கும் இவர்கள் ஏன் 205 ஸ்தானங்கள் கொண்ட தமிழ்நாட்டின் சட்டசபைக்கு 55 பேர் மட்டுமே போட்டியிடுகிறார்கள்? ஏன் 150 இடங்களுக்காவது போட்டியிடக் கூடாது?

வாக்காளர் பெருமக்களே, தி.மு. கழகம் அகலக்கால் வைத்துவிட்டதாக உங்களிடம் ஓடிவந்து அங்கலாய்க்கும் காம்ரேட்களிடம் கேளுங்கள் இந்தக் கேள்வியை:—

★ ஒற்றர் வேலை செய்வதற்கு 55 இடங்கள் அதிகமல்லவா?

★ குழப்பத்தை வளர்ப்பதற்கு மட்டுமே ஆட்சிபீடம் செல்ல நினைக்கும் கும்பலுக்கு 55 இடங்கள் அதிகமல்லவா?

★ இந்த நாட்டின் ஜனநாயக வாழ்வுக்கும் எதேச்சாதிகார எதிர்ப்புச் சக்திகளுக்கும் எமனாக வாய்த்திருக்கும் உங்களுக்கு கிராம்வெல் காலத்திய சிறப்புப் பெயர்களை வழங்கி கவுரவிப்பதில் திருப்திதானே?

—மு. சண்முகம்.



"இங்குள்ளோர் வாழ்வை வளப்படுத்துவதற்கான முக்கிய திட்டங்களைத் தீட்டியிருந்தோம். ஆனால் அவற்றை நிறைவேற்றி வைக்கப் பணமில்லாது தவித்தோம். வடக்கு நோக்கித் திரும்பி, டில்லி (மத்திய) அரசைக் கெஞ்சிக் கேட்டோம். கேட்ட உதவி அளவுக்கு மீறியதோ அவசியமற்றதோ அல்ல. ஆனால் டில்லி அரசு எதனையும் தர மறுத்து விட்டது."

—1952 ல் (நிதி அமைச்சர்)
**பி. கோபால் ரெட்டி.**

நாங்கள் எங்களுக்குத் தேவையானதொரு சுதந்திர தாயகத்தை - தென்னாட்டை உருவாக்கிக் கொள்ள உங்களால் (டில்லி ஆட்சியினரால்) கட்டாயப்படுத்தப்படுகிறோம்....

— 1953 ல்
தோழியர் **அன்னிமாஸ்கரனுஸ்**
கேரள எம். பி.
(பாராளுமன்றத்தில்)

"தென்னாட்டை மத்திய அரசு புறக்கணித்தே வருகிறது. தென்னாடு முன்னேற வேண்டுமே என்ற அக்கறையைச் சிறிதுகூடக் காட்டுவதில்லை."

—1955 ல் **ஏ.எம். தாமஸ்** எம். பி.
(பாராளுமன்றத்தில்)

"மத்திய சர்க்காரை நினைக்கும் பொழுது தென்னாட்டு மக்கள் ஏமாற்றத்தால் சோகமடைகிறார்கள்."

**— பீமப்பநாயக்.**

"வரி செலுத்துகிறோம் மத்திய அரசுக்கு. ஆனால் வசதிகளோ நமக்குக் கிடைப்பதில்லை.

**—சுப்பம்மா,**

"இந்திய அரசு ஒருதலைப்பட்சமாக நடந்து வருகிறது. தென்னாட்டை மோசமாக ஆக்கிவிட்டது."

**—டி. சி. பாசப்பா.**

"டில்லி சர்க்காரால் நாம் அடையும் தொல்லைகள் கொஞ்சமல்ல. தென் இந்திய மக்களின் ஆசைகளையும், தேவைகளையும் வீடக்கிலிருக்கும் ஆட்சியாளர்கள் அலட்சியப் படுத்துவதாகச் சொல்லப்படுவதை நான் ஒத்துக்கொள்கிறேன். தென்னாடு முழுமையாகப் புறக்கணிக்கப் பட்டு வருகிறது."

**— ஐ. முகமது இமாம்.**

"(மேற்குறிப்பிட்டுள்ள மைசூர் சட்டசபை) உறுப்பினர்கள் சொல்லியவற்றை நானும் ஏற்றுக்கொள்ள வேண்டியவனாகத் தானிருக்கிறேன்."

—மைசூர் முதலமைச்சர்
**கே. அனுமந்தையா.**
(4-4-1955, சட்டசபையில்)

"தொழில் வளத்தில் தென்னாடு பிற்பட்ட நிலையில் இருக்கிறது."
-தொழில் அதிபர்
**—அனந்தராமகிருஷ்ணன்.**

"கல்கத்தா, சாம்செட்பூர், கான்பூர், பம்பாய், அகமதாபாத் போன்ற இடங்களில் மட்டும் வளர்ச்சி ஏற்பட்டால் போதுமா? அது தென் இந்திய மக்கள் வேலை பெறவும் அவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும் செய்யுமா? தென் இந்தியாவிலுள்ள மக்கள் கிளர்ச்சி செய்து தங்களின் நியாயமான பங்கைப் பெறவேண்டும்.

டில்லியின் ஆணைகளுக்குப் பணிந்து நடப்பது தென்னாட்டு மக்களுக்கு நலந்தரத் தக்கதல்ல."

**—சர். ஏ. இராமசாமி முதலியார்**
(26-1-1956ல்; தாழையூத்தில்)

"தென்னாடு தொழில் துறை வளர்ச்சியில் (வடநாட்டைவிட) மிகப் பின்தங்கிக் கிடக்கிறது என்

# தி. மு. க.
## உங்கள் கட்சி

பதில் கருத்து வேறுபாடே இருக்க முடியாது."
—7-7-56 ல் தூத்துக்குடியில்
நிதியமைச்சர் சி. **சுப்ரமணியம்**

தமிழகத்து அரசியலில் ஒளிமயமானதொரு எதிர்காலத்துக்கு நல்வரவு கூறும் பொதுத் தேர்தல் நடைபெற இன்னும் ஒரு திங்களே உள்ளது. போட்டியிடுகிற எல்லா அரசியல் கட்சிகளும் தங்களின் அபேட்சகர்களின் பெயர்ப் பட்டியலை அநேகமாக வெளியிட்டு விட்டு, அந்த அபேட்சகர்களை வெற்றியடையச் செய்வதற்கான பிரச்சார வேலையில் தீவிரமாக ஈடுபடத் தொடங்கிவிட்டன.

பிரச்சாரப் பணியில் ஈடுபடும் பிற கட்சிகளெல்லாம், திராவிட முன்னேற்றக் கழகத்தைக் கண்டித்துப் பேசும்பொழுது உண்மைக்கு மாறான பலவற்றைத் துணிகரமாகக் கூறத் தலைப்பட்டுள்ளன. அதற்கான அடிப்படைக் காரணம் அது மற்றையக் கட்சிகளைவிட முற்றிலும் மாறுபட்டதாக இருப்பதே ஆகும்.

வெள்ளைக்காரனுக்கு வழியனுப்பு உபசாரம் நடத்தியான பிற்பாடு, இந்தியத்துணைக்கண்டத்தை ஆட்சி செய்யும் வாய்ப்பைப் பெற்றுள்ள காங்கிரஸ் கட்சியின் முழு வரலாற்றையும் நாம் புரட்டிப் பார்த்தால், அது இந்திய மக்களின் குரலாக - போராட்ட அமைப்பாக - இருந்த காலத்திலிருந்து, இன்றுவரை வடநாட்டினருக்கே உரிமையானதொரு தேசிய இயக்கமாக இயங்கி வருவதைக் கண்கூடாகக் காணமுடியும். 1885ம் ஆண்டு பம்பாயில் **உமேஷ்சந்திர பானர்ஜி** தலைமையில் நடைபெற்ற அனைத்திந்திய காங்கிரஸ் மாநாட்டிலிருந்து, அண்மையில் **இந்தூரில், தேபர்** தலைமையில் நடைபெற்ற மாநாடு வரை ஏறத்தாழ 62 மாநாடுகள் நடைபெற்றிருக்கின்றன. ஒவ்வொரு மாநாட்டுக்கும் அந்தந்தக் காலத்தில் யார் யார் காங்கிரசின் தலைவராக இருந்தார்களோ அவர்களே தலைமைவகித்து வந்திருக்கின்றனர்.

"அனைத்திந்திய காங்கிரஸ் இந்திய மக்களின் ஏகோபித்த குரல். ஒரே அமைப்பு. வடக்கு தெற்கு என்றில்லாமல் எல்லோருக்கும் பயன்படும், பாடுபடும் தனிப்பெரும் முகாம்" என்றெல்லாம் அதனைச் சார்ந்த வடநாட்டுப் பெருந்தலைகளும், அவர்களிடத்தில் அடிக்கடி காவடி தூக்குகிற இந்த நாட்டு 'குலாம்'களும் சொல்லி வந்திருக்கின்றனர். ஆனால் அந்தக் கட்சியை இதுவரை யார் ஆண்டு வந்திருக்கிறார்கள், அல்லது அதிலே யாருடைய செல்வாக்கு அதிக அளவில் இருந்துவந்திருக்கிறது, என்பதை நாம் கவனித்துப் பார்த்தால் அது அப்பழுக்கற்றதொரு வடநாட்டு அமைப்பு என்பது தெளிவாக விளங்கும்.

1897ம் ஆண்டு அம்ரோடி காங்கிரஸ் தலைவர் சங்கரன் நாயர்.

1920ம் ஆண்டு நாகபுரி காங்கிரஸ் தலைவர் விஜயராகவாச்சாரி.

1926ம் ஆண்டு கௌஹாத்தி காங்கிரஸ் தலைவர் எஸ். சீனிவாசய்யர்.

1948ம் ஆண்டு நடைபெற்ற காங்கிரஸ் தலைவர் பட்டாபி சீதாராமையா.

ஆகியோரைத் தவிர அனைத்திந்திய காங்கிரசின் தலைவர்களாக இதுவரை இருந்து வந்திருப்பவர்கள் அனைவரும் வடநாட்டுக்காரர்களே என்பதை 'அகில இந்திய காங்கிரஸ் சரித்திர'மே நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

இந்த நால்வரும்கூட தென்னாட்டுக்கே உரித்தானவர்கள் என்று நாம் சொல்வது, நம்மை நாமே ஏமாற்றிக்கொள்வதாகும். (இவர்களில் சங்கரன் நாயர் ஒருவர் தவிர மற்றவர்கள் தமிழ்நாட்டு, ஆந்திரப் பார்ப்பனர்கள்.)

காங்கிரஸ் இயக்கத்தில் தென்னாட்டவர் பங்கு எது என்று கணக்கிட்டால் செக்கிழுத்த சிதம்பரம், கொடி காத்த குமரன் போன்ற ஆயிரக்கணக்கான தியாகிகள் நமக்குத் தெரிவார்கள். நிர்வாகத் திறமையிலும் அத்தகைய சிறந்த அறிஞர்கள் பலர் தென்படுவார்கள். என்ற போதிலும் அனைத்திந்தியக் காங்கிரசை ஆண்டு வந்திருப்பவர்கள் அனைவரும் வடநாட்டவர்களே என்பதிலிருந்து காங்கிரஸ் யாருக்கு உரிமையான அமைப்பு என்பதை நாம் தெரிந்துகொள்ளமுடியும்.

கட்சி அமைப்பிலே ஆதிக்கம் பெற்றுவிட்ட வடநாட்டவர்களே, ஆட்சி அமைப்பிலும் ஏகபோக பாத்யதையைப் பெற்றுவிட்டனர். எனவேதான் டில்லி ஆட்சியினர் தீட்டுகிற திட்டங்களெல்லாம் வடநாட்டை வளப்படுத்துவதாகவும், தென்னாடு மேலும் மேலும் தேய்ந்து கொண்டே செல்லும் நிலையை உருவாக்குவதாகவும் அமைந்திருக்கின்றன.

வடநாட்டு காங்கிரஸ் 'பாதுஷா'க்கள் அரியணை ஏறியதிலிருந்து இன்றுவரை ஐந்தாண்டுத் திட்டங்களிலெல்லாம் தென்னாடு வஞ்சிக்கப்பட்ட வரலாற்றை, உலகிலேயே பெரிய திட்டங்களில் ஒன்று என்று கூறப்படும் தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டம் (பீகார்-வங்கம்) கம்பீரமாகச் சொல்லிக்கொண்டிருக்கிறது. பக்ராநங்கலும் (பஞ்சாப்), ஹிராகுட்டும் (ஒரிசா), கோசியும் (பீகார்), ரிகாண்ட்டும் (உ. பி), சம்பலும் (ம. பி-ராசஸ்தான்); கொயினாவும் (பம்பாய்) நம்மைப் பார்த்துக் கேலிக்குரலெழுப்பிக் கொண்டிருக்கின்றன. இவற்றிற்கென்று சுமார் 600 கோடி ரூபாய்க்குமேல் கொட்டிக் குவித்துள்ள டில்லி ஆதிபத்தியம் நமக்கென்று தந்திருக்கும் திட்டங்

கவனியுங்கள்! கவனியுங்கள்!

## திருக்கோஷ்டியூர்த் தொகுதியில்
# கண்ணதாசன் நிற்கிறார்

திருக்கோஷ்டியூர் தொகுதியைச் சேர்ந்த தோழர்கள் வெளியூரிலிருந்தால் அவர்கள் தயவு செய்து தங்கள் பெற்றோருக்கோ, உற்றோருக்கோ கடிதம் எழுதி, கண்ணதாசனை ஆதரிக்கச் செய்ய வேண்டுகிறோம்.

நூற்றுக்கணக்கான, அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவர்கள் அதேபோல் செய்திருக்கிறார்கள். இலங்கையிலிருக்கும் தோழர்களும் எழுதியிருக்கிறார்கள். மற்றத் தோழர்கள் தயவு செய்து உடனே எழுதக் கோருகிறோம். தொகுதியின் நிலை நம்பிக்கை தருவதாக இருக்கிறது. ஆனாலும், தோழர்களின் முழு ஒத்துழைப்பும் மிக அவசியம்.

பெற்றோருக்கு எழுதுங்கள்!
உற்றோருக்கு எழுதுங்கள்!

இயன்றால் தொகுதிக்கு நீங்களே வாருங்கள்!

யார் வந்தாலும் வேலை இருக்கிறது!

இதை நீங்கள் செய்தால் வெற்றி நிச்சயமாக இருக்கிறது!
இதற்குமேல் சொல்ல என்ன இருக்கிறது?

தொடர்பு கொள்ள முகவரி:
**கண்ணதாசன்**
தி. மு. கழக தேர்தல் அலுவலகம்,
திருப்புத்தூர்,
இராமநாதபுர மாவட்டம்.

அவசரம்! அவசியம்!

களெல்லாம் அநேகமாக 30 கோடி ரூபாய்க்குள்ளேயே அடங்கும்.

நீர்ப்பாசன, மின்சாரத் திட்டங்கள்தான் இவ்வாறு என்றால், உருப்படியான தொழில் வளர்ச்சித் திட்டங்கள் எவையாவது இங்கு உருவாக்கப்பட்டுள்ளனவா என்று கவனித்துப் பார்த்தால் ஏமாற்றமே பதிலாகக் கிடைக்கிறது.

உர உற்பத்திச்சாலை.
ரயில் எஞ்சின் தொழிற்சாலை.
சிமிண்ட் தொழிற்சாலை.
நேபா மில்ஸ்.
இயந்திர சாதன உற்பத்திச் சாலை.
கப்பல் கட்டும் தொழிற்சாலை.
பெனிசிலின் ஆலை.
இரும்பு உருக்குத் தொழிற் சாலை.
இரும்பு உருக்குத் தொழிற் சாலை (ஜெர்மன் திட்டப்படி)
இரும்பு உருக்குத் தொழிற் சாலை (ரஷ்யத் திட்டப்படி)
பிரங்கித் தொழிற்சாலை.
தாணையத் தொழிற்சாலை.
விளையாட்டுக் கருவித் தொழிற் சாலை.
ரேடியோ உற்பத்திசாலை.

ஆகிய அனைத்தும் வடநாட்டிலேயே! இங்கே நாம் சொல்லிக் சொள்வதெல்லாம் பெரம்பூர் ரயில் பெட்டித் தொழிற்சாலை ஒன்று மட்டுமே!

இவை தவிர, மத்திய அரசினரின் செலவில் பலதுறைகளுக்குமான ஆராய்ச்சி நிலையங்கள் உருவாக்கப் பட்டன. அவற்றிலும் தென்னாட்டிற்கு 'பட்டைநாமத்'தைக் குழைத்துப் பூச அவர்கள் தயங்கவில்லை.

கால்நடை ஆராய்ச்சிக் கழகம்—ஈசாத்நகர் அண்டு முக்தேஸ்வர்.
அரக்கு ஆராய்ச்சி நிலையம்—ராஞ்சி.
காட்டு இலாகா ஆராய்ச்சி நிலையம்—டேராடூன்.
மத்திய அரிசி ஆராய்ச்சி மன்றம்—கட்டாக்.
மத்திய உருளைக்கிழங்கு ஆராய்ச்சி மன்றம்—புனா.
மத்திய காய்கறி ஆராய்ச்சிக் கூடம்—கூனூர்.
புற்றுநோய் ஆராய்ச்சி அவை—பம்பாய்.
கப்பல் தொழில் வளர்ச்சி ஆராய்ச்சி நிலையம்—புனா.

இவை அனைத்தும் வடநாட்டில்!

இவற்றோடு சேர்ந்த **இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகம்** நம்முடைய நீலகிரியைத் சேர்ந்த கூனூரில் இருந்தது.

'கூனூரில் ஏன் கூடாதாம்?' என்று நாம் என்னதான் 'கரடியாய்க் கத்தி'யபோதிலும், அதனையும் தூக்கிக்கொண்டு போய் வடக்கிலே வைத்து விட்டார்கள் பாரத மாதாவின் ஏகபுத்திரர்கள்.

டில்லி ஆதிபத்தியத்தினரின் இந்த மாற்றாந்தாய் மனப்பான்மையால், வடநாடு அமெரிக்காவைப் போல ஐசுவரியத்தை மேலும் மேலும் பெருக்கிக் கொண்டு செல்லச் செல்ல, 'அகிலும் தேக்கும் அழியாக்குன்றம், அழகாய் முத்துக் குவியும் கடல்கள், முகிலும் செந்நெலும் முழங்கு நன்செய் முல்லைக் காடு மணக்கும்' நமது தாயகம், எல்லாத் துறைகளிலும் பின்தங்கிக் கிடப்பதையும், வடநாட்டின் வேட்டைக்காடாக, 'மார்க்கெட்'டாக, அடிமைச் சந்தையாக உருமாறி வருவதையும் நாம் மட்டுமல்ல நாட்டை ஆளுகிற பாராளுமன்ற, சட்டசபைத் தென்னாட்டு உறுப்பினர்களிலிருந்து அமைச்சர்கள் வரை, காங்கிரஸ் தலைவர்களோடு நெருங்கி அமர்ந்திருக்கும் கட்சிக் காரர்களிலிருந்து தொழில் துறையில் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ள அதிபர்கள் வரை 'மூக்கால் அழுது முனகித் தொலைத்து'ள்ளதை நாம் முதலில் குறிப்பிட்டுள்ளவற்றிலிருந்து அறியமுடியும்.

காங்கிரஸ் அமைப்பு எப்படி வடநாட்டுச் சீமான்களின் முகாமோ, அதுபோலவே அனைத்திந்தியக் கட்சிகளாகிய பிற அனைத்தும் வடநாட்டவரின் பின்னேடிகளாகவே உள்ளன. இந்திமொழிப் பிரச்சினை பற்றிய அனைத்திந்தியக் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுச் செயலாளர் தோழர் அஜய்கோஷின் கருத்திலிருந்தே இந்த உண்மை நமக்குத் தெரியவரும்.

இங்கே வாழ்கிறவர்களின் பிரச்சினைகளுக்கு உயிரூட்டவும், இங்குள்ளோர் வாழ்வைச் 'சொர்க்க'மாக்கிக்கொள்ள வழிவகைகள் செய்யவும், இந்த நாட்டு மக்கள் மேலான நிலையை அடையப் பெருந்தொண்டாற்றவும் இங்கே பிறந்து, இங்குள்ளோருக்குப் பாடுபடும் ஒரு கட்சியாலேயே முடியும். அந்த அரும்பெரும் பணியைத்தான் இன்றைய தினம் தேர்தலில் ஈடுபட்டுள்ள திராவிட முன்னேற்றக் கழகம் செய்துகொண்டிருக்கிறது—இனியும் செய்ய இருக்கிறது.

திராவிட முன்னேற்றக் கழகம், வடநாடு தென்னாட்டை வஞ்சிப்பதை மட்டுமே எடுத்துக்காட்டுவதோடு நின்றுவிடவில்லை. அந்த நிலை மாற நமக்கென ஒரு தனி அரசு—சுதந்திரத் தாயகம் அமைக்கப்பட்டாக வேண்டும் என்பதை எடுத்துச் சொல்கிறது. இவை காரணமாகவே திராவிட முன்னேற்றக் கழகம் மற்றைய அரசியல் கட்சிகளிலிருந்து மாறுபாடான ஒரு அமைப்பாக, முற்றிலும் தென்னாட்டவரின் கட்சியாகத் தன்னை ஆக்கிக்கொண்டிருக்கிறது.

தலைவர் **அண்ணா** அவர்கள் ஒருமுறை தெளிவாகக் குறிப்பிட்டார்கள். "மற்றையக் கட்சிகளுக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் பெருத்த வேறுபாடுகள் உள்ளன. மற்றவர்கள் இருக்கிற ஒன்றை மாற்றி அமைக்கவேண்டும் என்கிறார்கள். திராவிட முன்னேற்றக்கழகம் புதியதான ஒன்றை—இப்போது இல்லாத ஒன்றை—உருவாக்கத் திட்டமிடுகிறது. ஆதலால் தான் மற்றக் கட்சிகளுக்கும் தி. மு. கழகத்திற்கும் பெருத்த வேறுபாடுகள் இருக்கின்றன" என்று.

அந்த மாபெருந்தலைக் கொண்டிருக்கிற மகத்தான உங்கள் கட்சி, தேர்தல் களத்தில் மிகத் தீவிரமாக ஈடுபட்டுள்ளதை நாடு அறியும். திராவிட முன்னேற்றக் கழகத்தின் இலட்சியம் அலட்சியப்படுத்திவிடக் கூடிய ஒன்றல்ல. தேர்தலோடு மறந்துவிடக்கூடிய ஒன்றுமல்ல. மனித சமுதாயம் அறிவுபெற்ற காலத்திலிருந்து நிமிர்ந்து நின்று எதனைக் கேட்கத் துடிக்கிறதோ, அத்தகைய விடுதலைக்குரல் அதனுடையது. பிரான்ஸ் நாட்டிலும், ரஷ்யாவிலும், அயர்லாந்திலும் மற்றும் எங்கெல்லாம் விடுதலை முரசம் ஒலித்ததோ, எங்கெல்லாம் இன்று உரிமை முழக்கம் எழுந்துகொண்டிருக்கிறதோ அதே போன்ற உரிமை உணர்வை வளர்க்கும் தனிப்பெரும் இயக்கமாக அது திகழ்கிறது.

"தனிப்பட்ட ஒரு மனிதனுக்கு எப்படி உடல்நலம் இன்றியமையாததோ அதேபோல, ஒரு ஜன சமுதாயத்துக்குச் சுதந்திரம் இன்றியமையாதது. தேகாரோக்கியமில்லாத மனிதன் சுகத்தை அனுபவிக்க முடியாது. அப்படியே சுதந்திரமில்லாத மக்கள் இன்பத்தை நுகர முடியாது" என்றான் எட்மண்ட் பர்க்.

**அடுத்த இதழில்!**

**இந்தியக் கம்யூனிஸ்டுகளின் கொலை, கொள்ளை பட்டியல் ஆதாரத்துடன் வெளிவருகிறது!**

பிரதிகளுக்கு முந்துங்கள்!

கம்யூனிஸ்டுகள் போட்டியிடும் இடங்களில் அச்சிட்டு வழங்குங்கள்!

சுதந்திர நாடு என்று சொல்லிக் கொள்ளும் இந்தியத் துணைக் கண்டத்தின் தென்பகுதி மக்களாகிய நாம், நமக்குத் தேவையான திட்டங்களை நிறைவேற்றிக்கொள்ள உரிமை கிடையாது. பிழைத்துப் போகட்டுமே என்று அந்த 'டில்லி எஜமானர்களாகப் பார்த்து ஏதாவது தந்தால் மட்டுமே, நம்முடைய தேவை பூர்த்தி செய்யப்படும் நிலையில் உள்ளது. நமக்கு எந்தத் துறையிலும் வழியிலும் சுதந்திரம் அளிக்கப்படவில்லை. நம்மை ஆள்கிற மாநில அரசினர் வட ஆட்சியினரின் சூதாட்டக்காய்களாக—ஆடும் பதுமைகளாக இருக்கின்றனர். அதனாலேதான் உள்ளம் சொல்வதை ஊரறியச் சொல்லத் திராணியற்றுக் கிடக்கின்றனர். இந்த அலங்கோலம் ஒழிய, தங்கம் விளையும் நாட்டில் தரித்திரம் ஏதனாலே என்று டில்லி தர்பாரைத் தட்டிக் கேட்க, உண்மை ஊழியம் புரிய, ஊராள்வோர் போக்கைத் திருத்த, தொழிலும் பொருளும் மக்களுக்கே என்ற தூய திட்டத்துக்குப் பணிபுரிய, ஜாதிபேதமற்ற—பொருளாதார பேதமற்ற அறிவுத் தெளிவு பெற்ற—அன்னியன் சுரண்டலுக்கு ஆளாகாத ஓர் இனத்தின் உரிமையுள்ள ஆட்சியை அமைத்துக் கொண்டு, உலக மன்றத்திலே அதனை வீற்றிருக்கச் செய்ய முன் வரும் பாட்டாளியின் பாசறை, மக்கள் மன்றம், ஏழையரின் முகாம், ஆற்றல்தரும் அறிவகம், உங்கள் கட்சி திராவிட முன்னேற்றக் கழகம் முன் வந்திருக்கிறது. அதன் அபேட்சகர்களை ஆதரிக்கவேண்டியது தென்னாட்டு மக்களுக்கே உரித்தான தேசியக் கடமையாகும். அதனை நிறைவேற்றி வைப்பார்கள் பொதுமக்கள் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு இருக்கிறது.

—ப. புகழேந்தி

**தி. மு. க. தேர்தல் நிதிச் சிறப்புக் கூட்டம்**

இடம்: பழனி டாக்கீஸ். நாள்: 3-2-57
காலம்: காலை 9 மணி.

பேசுவோர்:
நாஞ்சில் கி. மனோகரன், எம். ஏ.
"காலமென்னும் மணற்பரப்பிலே"
கண்ணதாசன்
"இலக்கியத்தில் காதல்"

நன்கொடை: ரூ. 1, அணா 8, 4.

அனைவரும் வருக!

—நகர் தி. மு. க., மதுரை.

**முல்லை**

**தை இதழ்**

**எங்கும்**

**விற்பனையாகிறது.**



## கொள்கைக் குழப்பிகள்

அன்புள்ள ஆசிரியருக்கு!

கம்யூனிஸ்டுக் கட்சியினர் கொள்கைக் குழப்பிகள் என்பது அவர்களது செயலாலேயே நன்கு தெரிகிறது. இந்தியத் துணைக்கண்டத்து காம்ரேட்டுகளும் சரி, ரஷ்ய நாட்டு 'ஒரிஜினல்' காம்ரேட்டுகளும் சரி, கொள்கைக் குழப்பம் என்பது அவர்களுக்கு உடன்பிறந்த வியாதி என்பதைத் தெளிவுபடுத்தி வருகிறார்கள். சான்றாக, 'புண்ணிய ஸ்தலமாம்' மாஸ்கோவின் 'புண்ணியத்' தலைவர்கள் புல்கானின், குருஷேவ் அங்கேரியின் சுதந்திரத்தை நாடும் பாமர ஏழை உழவர்களின் உதிரத்தை உறிஞ்சி இன்றுவரை கொடுங்கோன்மை புரிந்துவருகின்றனர்.

இரும்பு நெஞ்சினன், அறிவின் பொக்கிஷம், சிந்தனைச் சிகரம் என்றெல்லாம் போற்றிப் புகழ்ந்து பொதுவுடமை பேசியோர், இன்று கேவலம், ஸ்டாலினின் உருவச் சிலையைக்கூட உருத்தெரியாமல் ஆக்கிவிட்டனர். கொடுங்கோலன், பாதகன், சர்வாதிகாரி என்று தூற்ற ஆரம்பித்தனர். ஆனால் இன்று! உடனே திடீர் 'பல்டி'! எவருடைய உருவச்சிலையை உடைத்துத் தூளாக்கினரோ, அவரை, அந்த ஸ்டாலினைப் போற்றுகின்றனர், புகழுகின்றனர். இத்தகு ஈனமுள்ள செய்கையை நாம் வேறு எங்கு காணமுடியும்? நிலையற்ற மதியினர், நிலையற்ற கொள்கையினரின் கதி இதுதான். இந்தத்தேர்தல் உண்மையிலேயே அவர்களது கடைசி அத்தியாயந்தான்!

அன்புள்ள
மஜீது
புதுக்கோட்டை.

★

## காங்கிரசின் நிலை

அன்புடையீர் வணக்கம்!

பம்பாயில் நேரு பேசுகையில் 'தேசத்தை முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்லவல்ல பொறுப்பு வாய்ந்த ஸ்தாபனம் காங்கிரஸ்தான். ஜாதி மத வித்தியாசமின்றி காங்கிரஸ் தேசமக்கள் அனைவரையும் செழிப்பை நோக்கி அழைத்துச் செல்கிறது" என்று விளக்கியிருக்கிறார்.

ஆனால், "தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியில் வகுப்பு வாதமும், வேண்டியவர்களுக்குச் சலுகையும் தலைவிரித்தாடுகிறது. மேலும் சர்வாதிகாரப் போக்கே தென்படுகிறது" என்று த. நா. கா. கமிட்டி உபதலைவர் வெங்கடகிருஷ்ண ரெட்டியார் விடுத்துள்ள அறிக்கை ஒன்றில் குற்றம் சாட்டுகிறார். இதன் காரணமாக வெங்கடகிருஷ்ண ரெட்டியார், எல். எஸ். கரையாளர் உட்பட எட்டுக் காங்கிரஸ் நபர்கள் ராஜினாமா செய்துள்ளார்கள். நேரு பண்டிதருக்கு இது தெரியாமலிருக்கமுடியாது. பாவம் நேரு! அவர் பேசுவது ஒன்று! ஆனால் அவரது கட்சியில் நடப்பது ஒன்றாக இருக்கிறது!

அன்புள்ள,
ம. கோ. கோவிந்தன்
குறட்டாச்சேரி

★

## மரண அத்தியாயம்!

அன்புள்ள ஆசிரியருக்கு!

"பிரிவினை உணர்ச்சி கூடாது, அகில உலகப் பிரச்சினைதான் முக்கியம்" எனக் கம்யூனிஸ்டுகள் கூறி வருகிறார்கள். அகில உலகப் பிரச்சினையில் எகிப்து, ஹங்கேரி, இரு இடங்களிலும் நடந்த ஆக்கிரமிப்புக் கொடுமையை உலகறியும். எகிப்து நாட்டில் பிரிட்டனும், பிரான்சும் நடத்திய ஆக்கிரமிப்பைக் கண்டித்து கோஷம் எழுப்பிய இவர்கள் ஹங்கேரியில் ரஷ்ய ஏகாதிபத்தியத்தால் நடத்தப்பட்ட படுகொலைக்குக் கண்டனம் தெரிவிக்காமல் மழுப்புகிறார்கள்.

ரஷ்யாவின் சர்வாதிகாரப் போக்குக்கு வால் பிடிக்கும் இவர்கள், ஸ்டாலின் காலத்தில்—ஸ்டாலின் செயல்முறைகட்குத் துதி பாடினார்கள். ஆனால் இன்று குருஷேவ் ஸ்டாலினை, 'ஜனநாயக விரோதி' என்றதும் இவர்களும் அவ்வாறே கோஷம் போடுகிறார்கள். இதிலிருந்து பெரும் உண்மை வெளியாகிறது. ரஷ்யாவில் வரும் ஒவ்வொரு தலைவருக்கும் துதிபாடும் இவர்கள், ரஷ்யாவின் கூலியைப் பெற்றுக் கட்சி நடத்துபவர்கள் என்பது விளங்கும். அவர்களுக்காக உலகில் இவர்கள் ஆதரவு திரட்டியும் முக்கியமாக அமெரிக்காவை எதிர்த்தும் பேசுகிறார்கள்.

நேருவை ஏகாதிபத்தியதாசன் எனக் கூறிய கம்யூனிஸ்டுகள், குருஷேவ்-புல்கானின் இந்தியா வந்த போது நேருவை, 'சமாதான வீரர்' என்று சொன்னதும், தாங்களும் துதிபாடினர். அதோடு இல்லாமல் காங்கிரஸ் ஆட்சியை ஒழிக்க விரும்பவில்லை என்றும் அவர்கள் நல்வழி நடக்க எதிர்க்கட்சி வேண்டும் என்பதற்காகத் தேர்தலில் போட்டியிடுகிறோம் என்றும் கூறுகிறார்கள்.

தென்னாட்டில் எழுச்சியும், மொழிப்பற்று, நாட்டுப்பற்று ஏற்பட்டு, தி. மு. க. வளர்வது கண்டு, தூற்றியும், தாக்கியும் காலித்தனம் செய்கிறார்கள்.

தமிழ்நாட்டில் கம்யூனிஸ்டுகளின் பெருந்தலைகள் எல்லாம் தஞ்சை, திருச்சி ஜில்லாவிலே தேர்தலுக்குப் போட்டியிடுகிறார்கள். இந்தத் தொகுதிகளிலே தமிழ்மக்கள் நிச்சயம் இவர்கட்குப் பாடம் கற்பிப்பார்கள். இந்தத் தேர்தலோடு கம்யூனிஸ்டுகளுக்குத் தென்னாட்டில் மரண அத்தியாயம் துவங்கிவிடும் என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது!

அன்பன்,
சி. வ. துரையரசன்
மன்னார்குடி

★

## திருந்துமா?

அன்புள்ள ஆசிரியத் தோழருக்கு,

கம்யூனிஸ்டுகளின் பிதற்றல் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டே போகின்றது. இது இந்நிலையிலேயே போகுமானால் 1957ம் வருடம் மார்ச்சு மாதம் அதன் முடிவுத் திங்களாய் இருப்பதில் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஐந்தாண்டுகளுக்குமுன் தி.மு. கழக ஆதரவை நாடிய கம்யூனிஸ்டு, இன்று தி. மு. க.வை எதிர்க்கிறது என்றால் அதற்குக் காரணம்? தி. மு. க. கொள்கைகளில் மாறுதலா? அன்று சொல்லி வந்த திராவிட நாடு திராவிடருக்கே என்றுதான் இன்றும் சொல்லி வருகிறோம்.

ஐந்தாண்டுக்கு முன் தன்னை ஆதரித்த தி. மு. க.வை இன்று எதிர்ப்பதற்குக் காரணம், தி. மு. க. தேர்தலில் நிற்காது; அதன் ஆதரவைப் பெற்றுத் தமிழகத்திலே பல தொகுதிகள் அடையலாம் என்று எண்ணியிருந்த, கம்யூனிஸ்ட் கட்சிக்கு, தி. மு. க தேர்தலில் குதிக்கும் என்ற செய்தி ஏமாற்றத்தை விளைவித்தது. ப. ஜீவானந்தம் ஒருபொதுக்கூட்டத்தில் பேசும்போது தி. மு. கவிற்குப் பொதுஜன ஆதரவு கிடையாது; எங்களுக்குத்தான் ஆதரவு இருக்கிறது. எங்களுக்கு ஓட்டுப் போடுங்கள் என்று கூறினாராம். ஆதரவு இல்லைதான்! பரிதாபம்! ஸ்டாலின் காலத்திலே ஸ்திரமான கம்யூனிஸ்டுக் கட்சியை நிர்ணயித்து, புல்கானின் காலத்தில் ஆதரவு இல்லாமல் புழுங்கித் துடிக்கும் கம்யூனிஸ்டுக்காரருக்கு, ஆதரவு இல்லாமல், மற்ற கட்சியைப் பார்த்து உனக்கு ஆதரவு இல்லை என்று கூறி மனதைத் தேற்றிக் கொள்வதில் ஆச்சரியப் படுவதற்கில்லை. கம்யூனிஸம் உண்மையான சோஷலிசத்தை உருவாக்கும். ஆகையால் அதற்கே ஓட்டுப் போடுங்கள் எனக் கூறினார் ஜீவானந்தம்.

அவர் நினைப்பது போல் மக்கள் ஏமாளிகளல்ல. இது 1957-ம் வருடம் என்பதை இனியாவது உணரட்டும்.

தி. மு. க.விற்கு அனுபவமில்லை. அவர்கள் ஒரு இடத்தில் கூட வெற்றியடைய முடியாது எனக் கூறியிருக்கிறார் கல்யாணசுந்தரம்.

மக்களுக்குத் தெரியும், கம்யூனிஸ்டுகள் கதியற்றவர்கள். அவர்களுக்குக் கடைசி முழக்கம் 1957-ம் வருடம் மார்ச் மாதம் என்பது தெரியும். இந்திய அரசியலிலே கம்யூனிஸ்டுகளின் சகாப்தம் அடியோடு அழியும் காலம் அண்மையில் நெருங்கிவிட்டது. சாகப் போகிற காலத்திலே சங்கரா, சங்கரா, என்பார்களாம் பக்தசிகாமணிகள். அதுபோல் கம்யூனிஸ்டுக் கட்சி அழியப்போகும் நேரத்திலே ஜனநாயகம் பேசுகிறது.

கொள்ளை, கொலை நடத்திப் பொதுவுடமை என்ற பெயரால் புது ராஜ்யம் ஏற்படுத்த முயன்ற கம்யூனிஸ்டுகளுக்கும், தி. மு. க. தேர்தல் போராட்டம் சித்தத்தைக் கலக்கிவிட்டது போலும்.

சமீபத்தில் திருச்சியில் நடந்த பொதுக் கூட்டத்தில் கல்யாணசுந்தரம் பேசும்போது, இன்னும் பல ஆண்டுகளுக்குக் காங்கிரஸ் ஆட்சிதான் இருக்குமென்று கூறினாராம். என்ன நம்பிக்கை! காங்கிரஸ் ஆட்சி நீடிக்கவேண்டும் என்ற கவலை காமராசருக்கு இருப்பதைவிட கல்யாணசுந்தரத்திற்குத் தான் அதிகம் இருக்கிறது.

குடியரசு தினத்தன்று இரவு 7-45 மணிக்கு இலங்கை வானொலியிலே, ஏ. கே. கோபாலனுடன் நடந்த பேட்டியின்போது, அங்குள்ள ரேடியோ நிலையத்தார் ஒருவர், "உங்கள் நாட்டில் எதிர்க்கட்சி, அரசாங்கத்திற்கு எதிராக ஒன்றுமே பேசுவதில்லை என்றும், உங்கள் கட்சி தூங்குகிறது என்றும் கேள்விப்பட்டோம். உண்மையா!" என வினவினார். வெட்கம்! வெட்கம்! அவ்வளவு தூரத்திற்கு நம் 'கம்யூனிஸ்டுகளின்' திறமை கடல் கடந்துவிட்டது. கம்யூனிஸ்ட் தலைவரைப் பார்த்து, "உங்கள் கட்சி தூங்குகிறதா? என்று கேட்டாரென்றால், கம்யூனிஸ்டுகளின் காலம் கடந்துவிட்டது, அரசியலில் இருந்து அவர்களுக்குப் பூரண ஓய்வு தேவை என்பது புலனாகிறது.

அன்புள்ள,
சேரா. மன்னன்,
மேட்டூர் அணை (ஆர். எஸ்.)

★

## அனுதாபத்துக்கு உரியவர்கள்!

அன்புள்ள ஆசிரியருக்கு!

இன்றைய நமது அரசியல் பிரச்சினையை எடுத்துக் கொண்டால் நமது தென்னகத்துக் கம்யூனிஸ்ட் தோழர்கள், ஆழ்ந்த அனுதாபத்திற்கு உரியவர்களாகின்றனர். இன்றைய தேர்தல் மிக மிக முக்கியமாகக் கருதப்படுகிறது. காரணம் மக்களிடத்திலே மிக மிகச் செல்வாக்குப் பெற்றுத் தேர்தலிலே ஈடுபட்டுள்ள திராவிட முன்னேற்றக் கழகமே. அதற்கு மக்களின் மனப்பூர்வமான ஆதரவு இருப்பதைக் கண்டு மாற்றுக்கட்சிகள் அனைத்தும் மிகவும் கீழ்த்தரமான பேச்சில் இறங்கியுள்ளது. ஆனால் மக்கள், தாங்கள் விரும்புவது என்ன என்பதை வருகிற தேர்தலிலே நிரூபித்துவிடுவார்கள்.

குறிப்பாக, கம்யூனிஸ்ட் கட்சிக்கு இருந்த செல்வாக்கு அடியோடு அழிந்துவிட்டது. காரணம், மற்ற மாநிலங்களைச் சார்ந்த கம்யூனிஸ்ட்டுகளுக்கும், தென்னகத்துக் கம்யூனிஸ்ட்டுகளுக்கும் உள்ள வேறுபாடே! மற்ற மாநிலங்களைச் சார்ந்தவர்கள், அந்த மாநில மக்களின் முடிவிற்கு ஏற்ப நடமாடுகின்றனர். ஆனால் தெற்கைச்சார்ந்தவர்கள் மட்டும்தான் ஏகபோக இந்தியா என்ற அடிப்படைத் தத்துவத்தை வைத்திருக்கின்றனர். ஏக இந்தியா, ஏகஇந்தியா என்று கூக்குரல் இடுகின்றனர். அதனால் தென்னகத்து மக்கள் வெறுப்புணர்ச்சியும், விழிப்புணர்ச்சியும் பெற்றுவிட்டனர்.

நமது தென்னகத்துக் கம்யூனிஸ்ட் தோழர்கள் நிலைமையை எண்ணிப் பார்த்துத் திருந்துவார்கள் என்று கருதுகிறேன். இன்றேல் நடைபெறும் தேர்தலில் உறுதியாக நமது மக்கள் சரியான படிப்பினையைக் காட்டுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

இங்ஙனம்,
அருள்
காரமடை.



நெசவாளர்களின் துயர் துடைக்க முன்நின்றது கம்யூனிஸ்டுக் கட்சியே.
—ஜீவானந்தம்.

அவர்களை 'ஒட்டாண்டிகளாக' ஆக்கிய பெருமையும் கம்யூனிஸ்டுக் கட்சிக்கே.
—ஒரு அனுபவசாலி.

★

பாடுபடும் தமிழன் பட்டினி கிடக்கிறன். அவன் துயர் துடைக்க வெறும் அலங்காரச் சொல் போதாது.
—மணலி கந்தசாமி.

அரிவாளும் சுத்தியலும் எடுக்கவேண்டும்.
—அவர் சொல்லாதது.

★

காங்கிரசை நம்புவதை விடக் காட்டாற்று வெள்ளத்தை நம்பலாம்.
—புதிய ராஜிஞாபாக்கார்.

இப்போதாவது புத்தி வந்ததே!
—பழைய ராஜிஞாபாக்கார்.

★

அரவங்காடு வெடி மருந்து பாக்டரியில் ஆட்குறைப்பு.
—பத்திரிகைச் செய்தி.

நமது காம்ரேட்கள் வைத்த 'வெடியி'னல் வந்த விளைவோ!
—ஒரு சந்தேகி.

★

சங்கு கணேசனின் எடை 11 ராத்தல் குறைந்தது.
—பத்திரிகையில் வந்த செய்தி.

காமராசரின் எடை அதிகரித்தது.
—வராத செய்தி.

★

நியாய விலைக் கடைகள் விரைவில் மூடப்படும்.
—பத்திரிகைச் செய்தி.

நமது சென்னை அமைச்சர்களில் யாராவது அந்த வைபவத்தை நடத்திவைப்பார்கள் என்று தெரியவருகிறது.
—வராத செய்தி.

★

200 மாடுகள் செங்கொடிகளுடன் ஊர்வலம்.
—ஜனசக்தி.

மாடுகள்கூட ரஷ்யாவை நோக்கி நடை போட்டிருக்குமோ!
—ஒரு சந்தேகி.

★

ஐந்தாண்டுத் திட்டம் பற்றிக் கூட்டம் போட்டுப் பேசினல் கேட்பதற்கு ஆளே இல்லையே!
—காங்கிரஸ் எம். எல். ஏ.

குட்டிச்சுவர் என்று தெரிந்த பின்னும் யார் போய் முட்டிக் கொள்வார்கள்?
—கூட்டத்திற்கு வராதவர்.

ரஷ்ய விஞ்ஞானிகள் பைத்தியத்தைத் தெளியவைக்க மின்சாரத் தாக்கத்தைக் கண்டுபிடித்திருக்கிறர்கள்.
—பத்திரிகைச் செய்தி.

சபாஷ்! நமது இந்தியக் காம்ரேட்களுக்கு அது பயன்படுமென்று எதிர்பார்க்கிறேம்.
—ஒரு நல்லவர்.

★

ஆரிய திராவிட போராட்டத்தைத் தூண்டியது நேரு தான்.
—குன்றக்குடி அடிகளார்.

தயவுசெய்து இதை நமது தமிழரசுக் கழக நண்பர்களுக்குச் சத்தம் போட்டுச் சொல்லுங்கள்.
—ஒரு நல்லவர்.

★

தமிழ்நாட்டில் பக்தி அதிகமாக வளர்ந்து விட்டது. இதற்கு நல்ல நாஸ்திகப் பிரச்சாரமே காரணம்.
—ஆச்சாரியார்.

இல்லையில்லை! நல்ல 'ஜால்ரா'க்கள் இதற்குக் காரணம்!
—சி. சுப்ரமணியம்.

★

அமெரிக்காவிலிருந்த ரஷ்ய அதிகாரிக்கு அமெரிக்க அரசாங்கம் கல்தா கொடுத்திருக்கிறது.
—பத்திரிகைச் செய்தி.

அந்த அதிகாரி 'அண்டர் கிரவுண்ட்' வழியாக ரஷ்யா வந்து சேர்ந்தார்.
—வராத செய்தி.

★

ரெயில் வண்டியில் இட நெருக்கடி இன்னும் அதிகமாகும்.
—ரெயில்வே அதிகாரி.

ஏன்? வல்லபந்த் போன்ற மந்திரி சதா வருகிறர்களோ?
—ஒரு மெல்லியன்.



ஆசிரியர், அச்சிடுபவர், வெளியிடுபவர் கண்ணதாசன், ஏ. எல். எஸ். அச்சகம், 2-127, மவுண்ட் ரோடு, சென்னை-6. தமிழ்நா

